


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


## கைவண்ணம்

*



பின்னால் இருப்பது துணியல்ல. மரத்தால் செதுக்கிய திரை. காஷ்மீரக் கைத்தொழிற் கலைஞர் ஒருவரைப் பாருங்கள்.

## துயர் துடைப்போம்

உலக மக்கள் சமுதாயம் ஏற்பட வேண்டுமானால் எல்லா நாடுகளும் பலாத்கார வழியை விட்டொழிக்க வேண்டும். காலனி ஆட்சி நிற வெறி போன்ற கொடுமைகளுக்கான மூல காரணங்கள் நீங்க வேண்டும். பல்வேறு நாடுகளிடையே பொதுவான லட்சியங்கள் பரிமாறிக் கொள்ளப்பட வேண்டும்.

ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வது தான் நவீன வாழ்வின் அடிப்படைத் தேவை. ஆனால் வல்லரசுகள் பரஸ்பரம் குற்றம் சாட்டிக் கொண்டு அழிவுப்பாதையில் சென்று கொண்டிருக்கின்றனர். கம்யூனிஸ்டுகளும் ஜனநாயக கோஷ்டியினர் என்று சொல்லிக் கொள்பவர்களும் தங்கள் வழி தான் சிறந்தது என்று நினைக்கின்றனர். உலகப் பிரச்னைகளுக்கு பரிகாரம் என்ற பெயரால் இருகோஷ்டிகளின் போக்கும் ஒருவரை ஒருவர் அழித்துக் கொள்வதாகத்தான் இருக்கிறது. ஆனால் மற்றவர்களை ஒரே அமைப்பின் கீழ் கொண்டு வந்து உலகப் பிரச்னைகளுக்கு பரிகாரம் காண முடியுமென்று இந்தியா ஒரு நாளும் எண்ணியதில்லை. உலகிலுள்ள எல்லா மதங்களும் இந்தியாவில் இடம் பெற்றனர்.

மதப் பற்றுள்ளவர்கள் என்று பலர் வெளிச்சம் போட்டுக் கொண்டு மதத்தின் பெயரால் பல கொடுமைகளை இழைத்து மதத்திற்கே தீங்கிழைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு உண்மையிலேயே ஆன்மீக உணர்வு இருக்குமானால் மக்கள் துயரைத் துடைக்கும் பணியில் அவர்கள் கலந்து கொள்ள வேண்டும்.

—டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்.

12-11-1961

# ★ விவசாயிகளின் ★ துணைவர்கள்

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல்பவர்."

என்பது குறள். உயிர்களுக்கு முதல் தேவையான உணவுப் பொருளை உற்பத்தி செய்பவன் விவசாயி. ஆகவேதான் அவனது தொழிலுக்கு வேறு ஈடு இணை கிடையாதென்றும் அவனது கை சோர்ந்தால் உலகமே தாழ்ச்சியடையும் என்றும் உலகம் சரியாக மதித்தது. அவ்விதம் இன்றியமையாத தொழிலைச் செய்பவனுக்கு உதவியாக உலகில் நிற்பவர்கள் பலர். ஆறறிவுடைய மனிதரேயன்றிக் குறைந்த அறிவுடைய பிராணிகளும் நேரடியாகவும் மறைமுகமாகவும் விவசாயிக்கு உதவி புரிகின்றன. அப்படித் துணை நிற்பவர்கள் யார் யார் என்று நாம் சிறிது அறிமுகம் செய்துகொள்வோம்.

விவசாயிகளின் துணைவர்களில் முதலிடம் பெறுவது எருது. ஆறறிவிற் குறைந்ததெனினும் உணவு உற்பத்தியில் அது விவசாயிக்குச் செய்யும் உதவிகளும் தியாகமும் பலவாகும். அதனை எண்ணியே இந்துக்கள் எருதினைக் கோயிலில் வைத்து கும்பிடவும் செய்தனர் என்று தோன்றுகிறது. விவசாயத்தில் ஆரம்ப வேலை உழவு.

"கொடிப்புழுதி கஃசா உணக்
[கின், பிடித்தெருவும்]
வேண்டாது சாலப்படும்."

என்று தமிழ் மறை கூறுகிறது. இந்த மறைப் பொருளுக்கேற்ப நிலத்தை ஒரு முறை, இரு முறை, பன்முறை உழுவதற்கு எருது பண்டுதொட்டு விவசாயிக்கு உதவி வருகிறது. உழவுக்கு அடுத்தபடி விவசாயத்திற்கு முக்கிய தேவையான எருவின் ஒரு பகுதியையும் எருது தருகிறது. எருக்குப்பைகளை வயலுக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பது முதல் விளைபொருளை வீட்டுக்குக் கொண்டுவரும்வரை எருது விவசாயிக்குச் செய்யும் உதவிகள் கணக்கில் அடங்கா. உற்பத்திப் பொருளை விற்பதற்கு இடம்விட்டு இடம் எடுத்துச் செல்வதற்கும் அவைகள் உதவுகின்றன. இதனால் கிராமப் பொருளாதாரத்தில் எருதுக்கு முக்கிய இடமுண்டு.

எருதானது விவசாயிக்குச்செய்யும் நன்மைகளுக்காக ஒவ்வொரு விவசாயியும் அதன் பராமரிப்பில் சிறிது கவனம் செலுத்த வேண்டும். நல்ல தினைப்புல் இருக்கின்ற இடத்தில் எருது செழித்துக் காணுமாதலால் விவசாயத்திட்டத்தில் கால் நடை தீவனப் பயிர் உற்பத்திக்குப் போதிய இடம் அளிக்க வேண்டும். அனேக விவசாயிகள் எருதுகளை வேலைக் காலத்திலன்றி இதர நாட்களில் நன்கு கவனிப்பது கிடையாது. அவைகள் தங்குவதற்குக்கூடக் கொட்டகைகள் அமைத்துப்பேணுவதில்லை. நோய் நொடி வராமல் பாதுகாப்பதிலும் அதிக கருத்துச் செலுத்துவதில்லை. இப்படியெல்லாம் நடப்பதால் எருதுகள் போதிய அளவு விருத்தியடையாமல் வலி குன்றித் திரிகின்றன. இந்தக் குறைகள் நேராமல் விவசாயிகள் எருதுகளுக்குச் சுகாதாரமான மேட்டு இடங்களில் மாட்டுக்கொட்டகைகள் அமைத்தும் ஆண்டின் எல்லா மாதங்களிலும் நல்ல தீவனம் அளித்தும் உயர்ந்த ரகக்காளைகளை உற்பத்தி செய்வதில் முயற்சிகள் மேற்கொண்டும் வரவேண்டும். முறையாக எருதுகளையும் பசுக்களையும் பேணினால் ஒவ்வொரு விவசாயியும் தன் குடும்பத்திற்குச் சில உபரி வருமானங்களையும் பெறலாம்.

ஆடு:-நம்முன்னோர்கள் ஆடு மாடுகளை வளர்த்துவாழ்க்கைநடத்திவந்தார்கள் என்று வரலாற்றில் படிக்கிறோம். அப்போது ஆடு மாடுகள் அவர்களின் குடும்பச் செல்வங்களாக இருந்தன. பண்டமாற்றுக்கள் கூட ஆடு மாடுகளை வைத்து ஒரு காலத்தில் நடை பெற்றிருக்கின்றன. இப்போதும் ஆடுவளர்ப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள் நாட்டின் ஒவ்வொரு பகுதிகளிலும் காணப்படுகிறார்கள். மக்கள் பெருக்கம் காரணமாக மேய்ச்சல் நிலங்கள் அனைத்தும் வயல்களாக்கப்பட்டு விட்டதால் ஆடு மாடு வளர்க்கும் தொழில் நாளடைவில் அருகிக் கொண்டு வந்துவிட்டது.

வயலுக்கு ஆட்டு உரத்தைப் போல் சிறந்த உரம் கிடையாது என்றுகண்டறியப்பட்டிருக்கிறது. இதனால் ஆட்டு மந்தைகளை வயலில் பட்டி போடுவது பண்டு முதல் வழக்கத்திலிருந்து வருகிறது. "ஆடு ஊட்டாத காடு பயனற்றது" என்பதும், "ஆட்டெரு அந்த வருஷம் மாட்டெரு மறு வருஷம்" என்பதும் தமிழ் நாட்டில் வழங்கும் பழஞ்சொற்களாகும். ஆட்டெருவின் சிறப்பையுணர்ந்தே தமிழக விவசாயிகள் அனேகமாக ஆடு வளர்ப்பையும் தம் துணைத்தொழிலாக வைத்திருக்கிறார்கள்.

ஆடுகள் அடிக்கடி அதிகமான குட்டிகளைப் போட்டு விரைவில் பல்கிப் பெருகும் தன்மையுடையன. ஆடு வளர்ப்பது இதர கால் நடைகளை வளர்ப்பது போல் அவ்வளவு செலவும் சிரமமுமாயிராது. எப்படிப்பட்ட பருவநிலையிலும் சூழ்நிலைகளிலும் ஆடு அதிக சேதமின்றி வளரும். இந்தியாவில் ஆட்டு மாமிசம் அதிகமாக உண்ணப்படுகிறது. ஆட்டுத்தோல் வெளிநாடுகளுக்குங்கூட ஏற்றுமதியாகிறது. ஆடை நெய்வதற்கான உரோமம் தரும் ஆடுகளும் இருக்கின்றன. மேற்சொன்ன காரணங்களால் ஒவ்வொரு விவசாயியும் ஆடு வளர்த்தால் விவசாய வேலை இல்லாத காலங்களில் குடும்பத்துக்கு வேண்டிய உபரி வருமானத்தை அவற்றின் மூலம் பெற முடியும். அவனது வீட்டுத்தேவைக்கான பாலுங்கூட ஆட்டிலிருந்து கிடைக்கும். பசு, எருமை, எருது ஆகியவற்றை வாங்கி வளர்க்க முடியாத விவசாயி இரண்டு ஆடுகளையாவது வைத்துக் கொண்டால் நாளடைவில் அவன் பெரிய மந்தைக்கு சொந்தக்காரனாகி விட முடியும். இதனால் ஆட்டை விவசாயியின் குடும்பத் துணைவன் என்று சொல்லலாம்,

கோழி:—கோழிக்கும் விவசாயத் தொழிலுக்கும் என்ன சம்பந்தம் என்று சிலர் நினைக்கலாம். கிராமப் பொருளாதாரத்தில் கோழியும் விவசாயியின் குடும்பத்துணைவன் என்று கருதத்தக்க சிறப்புடையதாகவே இருக்கிறது. வயலுக்குப் போகும் குப்பை கூளம், தொழு எரு ஆகியவற்றை விவசாயி வீட்டுக்கு புறத்தில் ஒதுக்கமான இடத்தில் சேர்த்து வைக்கிறான்.

(11-ம் பக்கம் பார்க்கவும்)

ஸ்ரீ அம்பாள்
ஆபீசர் பொடி
அனைவரும் விரும்புவது.
ஒரு தோலா டின்களிலும் கிடைக்கும்.
ஸ்ரீ அம்பாள் & கோ
201, தங்கசாலை தெரு. . . மதராஸ்.1.

கைத்தறி பட்டு, நூல் & மில் ஜவுளிகளுக்கு!
M.N.நாகேந்திரம் சன்ஸ்
மலைவாசல் திருச்சி

தொழிலாளர் பேட்டி-9

# நடுநிசிக் கடைகள்

-வா. கோ. பா.

நள்ளிரவில் அரைத் தூக்கத்தில் கண்விழிக்கும் குழந்தையொன்று "அம்மா ஜிலேபி பண்ணித்தாடி!" என்றழும்-இந்தக்கூற்றைப் போலவே நமக்கும் அகாலத்தில் பீடி சிகரெட்டோ, காபியோ டீயோ,— வயிறு பசிப்பதுபோலிருந்தால் தோசையோ இட்லியோ கூடத் தேவைப்படுவதுண்டு.

நாகரிகம் வளர வளர மனிதன் பகல் நேரம் போதாமல் இரவிலும், இரவு நேரம் போதாமற் பகலிலும் தன் அலுவல்களை விஸ்தரித்துக்கொண்டே போகிருன். இதில் "ஓவர் டைம்" பிரச்னை எழுவதேயில்லை. இரவு இரண்டு மணிக்கு மேல் ஒரு படக்காட்சிக்கு அனுமதி உண்டென்ருல் தினந்தோறும் சொல்லி வைத்தாற்போல் ஒன்றரை மணிக்கு நள்ளிரவில் கண் விழிக்கும் நான் முதல் டிக்கெட் வாங்கத் தயார்.

* * *

தள்ளுவண்டியில் அடுப்பு ஆவி விளக்கு, வெந்நீர் பாய்லர், ரொட்டி, பன்-வெற்றிலை பாக்கு, கோப்பைகள், திடீர் மழையிலிருந்து பாதுகாக்கும் ஓவர் கோட்டு-சகல வசதிகளுடனும் முச்சந்தியில் இரவு பத்து மணிக்கு மேல் காட்சி தரும் டீக்கடைக்காரரை விசாரித்தேன்.

"ஏனய்யா! இந்த உபத்ரவத்துக்குப் பேசாமல் பகல் நேரத்தில் ஒரு டீக்கடை வைத்துக்கொள்ளக் கூடாதா?"

"வச்சுக்கலாம்தான்! வச்சுக்க முடியல்லியே!"

"அப்படீன்ன?"

"வச்சுண்டா ஷாப்ஆக்டு-பாக்டரி ஆக்டு-என்றெல்லாம் வந்து சேருது- சம்பள ஆள்போட்டாலும் கஷ்டமாயிருக்கு, சொந்த ஆளை வைச்சாலும் நஷ்டமாயிருக்கு. முதலைப் போட்டுப் போகிறவன்-வருகிறவன் பெயரையெல்லாம்- கடன்கணக்கில்-எழுதி வச்சுப்பாராயணம் பண்ணனும் - நமக்கும் கடையைத் தொடர்ந்து நடத்த யாராவது தொடர்ந்து கடன் தரணும்"

"சரிசரி-பெருந் தொல்லை தான் - இதிலே உமக்குத் தினம் என்ன கிடைக்குது!"

"முதலில் வசவு கிடைக்குது! நான் ஒரே இடத்தில் கடையை விரிக்காமல் தள்ளு வண்டியில் வைத்திருப்பதால் நம் சகோதர அர்த்த ராத்ரிக் கடைக்காரங்க மனசுக்குள்ளாரவாவது திட்டத்தான் செய்வாங்க!..."

"பலே!...ரொம்பத் தமாஷாப் பேசறீங்களே! அதை நாம் பொருட்படுத்த வேண்டாமே!... என்ன; அஞ்சு ரூபாயாவது தேறுமா?"

"அஞ்சு ரூபா தேறுவதாவது?... அஞ்சு ரூபாய்க்கு வியாபாரம்ஆனுல் அதற்கே திருஷ்டி சுத்திப் போடணும்"

"ஆமாம்!... வழக்கமாக உங்களிடம் டிபன் சாப்பிட யாரு வருவாங்க — இந்த அகாலத்திலே!"

"கடைசி பஸ்ஸோ-ரயிலோ லேட்டா வந்ததனலோ-அல்லது கடைசி பஸ்ஸையோ ரயிலையோ கோட்டை விட்டதினலோ நடைபாதை வாசிகளாக மாறியபிரயாணிகளிலிருந்து இரவையும் பகலாக்கிக் கொண்டு "ஓவர் டைம்" வேலை செய்கிற தொழிலாளி வரை எல்லோருமே எங்களிடம் டிபன் இல்லாவிட்டாலும் "பன்"னும் "ரொட்டி"யும் சாப்பிட வருவார்கள்!"

"ஆமாம்! கோவிச்சுக்கப் படாது — ஒரு பேச்சுக்குக் கேட்கிறேன்— இப்படித் தினமும் பிள்ளை குட்டிகளைத் தனியா வீட்டிலே விட்டுட்டு........"

"போதும் போதும் மேலே சொல்லாதீங்க!... யாருக்காக இந்தப் பாடு?...அவங்களைக் காப்பாத்தத்தானே! நாலு மணி வரைக்கும் கூட ஒவ்வொரு நாள் வீடு திரும்பமுடியாது—என்ருலும் கையில் குலுங்கும் சில்லரையுடன்—இறங்கிவரும் தூக்கத்துடன் வீட்டுக்குத் திரும்புவதும்—அரை குறைத் தூக்கத்தில் அவள் கதவைத் திறப்பதும்......"

"பிரமாதமாகத்தானிருக்கும்!...வாழ்க்கையை விடியற்காலம் சிலர் தொடரட்டும்—வாழ்வின் அமைதியை விடியற்காலம் தொடங்கலாம் என்கிறீர் நீர்"

"அது சரி!...உங்களுக்கு என்ன வேண்டும்?..."

"எனக்கு இந்த வேலையில் வேறு ஒன்றும் வேண்டாம்!...முடிந்தால் உள்ளூர் பதிப்பு—ஒரு தினசரித் தாள் தான் வேண்டும்"

"ஓகோ!...ஸார் பத்திரிக்கை ஆபீசைச் சேர்ந்தவர் போலிருக்கு!"

"ஓய்!...நிறுத்துமையா? ...உம்மைப் பேட்டி காணத்தான் நான் வந்தேனே தவிர—உமக்குப் பேட்டி தர அல்ல" என்று அவரிடமிருந்து விடை பெற்றுச் சிறிது தூரத்தில் ஒரு கடை வாசலில் "திடீர்த் தோசை" தயாரித்தவரிடம் சென்றேன்.

"திடீர்த்தோசை" 'திடீர்ப்பாயசம்' என்றெல்லாம் தற்போது திடீருக்கு மகத்துவம் அளிக்கப்படுகிறது—"திடீர்க்கல்யாணம்" வரைக்கும் அது வந்திருப்பது வேறு விஷயம்.

என்னைப் பார்த்ததுமே அவர் "சொய்" யென்று மாவை வாணலியில் மடக்கினுர்—அல்லது — மடக்கில் மாவை வார்த்தார்.

"ஐயா! நமக்குத் தோசை வேண்டாமய்யா!" என்றேன்.

"உங்களுக்காக இல்லை—சினிமா விடும் நேரம் "ஸ்டாக்" தயார் செய்கிறேன் என்ருர் அவர். இரண்டு தனித்தனி அடுப்புக்களில் அவர் மாறி மாறித்தோசை—வார்க்கும் அழகை இரவு முழுதும் பார்த்து ரசிக்கலாம்.

முதலில் தோசை வேண்டாத நான் பிறகு பற்பொடி தேடி "அர்த்தராத்ரிக்குழாயில்" பல்தேய்த்து "தோசை சரணம் கச்சாமி—சட்னி சரணம் கச்சாமி— மிளகாய்ப்பொடி சரணம் கச்சாமி" என்று அவரிடமே போய்ச் சேர்ந்தேன்.

—நினைத்துப் பார்த்தால் விசித்திரமாயிருக்கிறது. மனிதன் பொல்லாதவனய்யா!—கடவுள் அமைதியாக ஓய்வு பெறக் கொடுத்த இரவைத் தூங்க— வைத்து விட்டு என்ன பாடு படுத்துகிருன் பாருங்கள்!



கரூர் P.S.ராமசர்மாவின்
சக்தி சஞ்சீவி
ஈரல் குலைக்கட்டிகளுக்கு நிகரற்றது.
எங்கள் சுற்றுப்பிரயாண விபரத்திற்கு எழுதுக

மோட்டார் சாமான்களுக்கு
பாரத் ஆட்டோஸ்டோர்ஸ்
99,பட்டர்வொர்த் ரோடு-திருச்சி-2
போன்: 359.

வெட்டுக்காயம், சொறி சிரங்கு, வேனல் கட்டி, கரப்பான், தீப்புண், முகப்பரு, சேத்துப்புண் முதலிய வியாதிகளைப் போக்குவதில் கைகண்ட களிம்பு
சைபால்
தயாரிப்பாளர்கள்:
தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி
மதுரை

# ஆங்கில தீபாவளி

- ஆர். கண்ணன்

ஆங்கில தீபாவளி என்றவுடன் கிறிஸ்துமஸ் என்ற ஐயம் பொதுவாக நம்மவர்கட்கு தோன்றும். ஆனால் அதற்கு சரியாக 50 நாட்களுக்கு முன் வரும் கொண்டாட்ட தினம் பற்றி வெளிநாட்டினர் வெகு சிலரே அறிவர். "கைபாக்ஸ் தினம்" என்றழைக்கப்படும் இந்நாள் வருடந்தோறும் நவம்பர் மாதம் 5-ந் தேதி இங்கிலாந்து முழுவதும் கொண்டாடப்படுகிறது. இதற்கும் கிறிஸ்துமஸ்ஸிற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. "கை பாக்ஸ் தினம்" ஒரு பண்டிகையுமல்ல. வெறும் கேளிக்கை தினம் தான்.

சுமார் 350 வருடங்களுக்கு முன் இங்கிலாந்திலே ஜனநாயக கருத்து உதயமாகி மன்னரது யதேச்சாதிகாரத்தை எதிர்த்து மக்கள் போராட்டம் துவக்கமாயிற்று. அப்பொழுது அரசருக்கு வெறும் அதிகார கருவியாக ஆரம்பித்த மந்திரி சபை, பூனை உருவில் தோன்றி புலியாக மாறி, மக்களின் உரிமைக் கோட்டையான பாராளு மன்றமாக திகழ்ந்தது. ஏற்கனவே நானூறு வருடங்களாக முதலில் பணிந்து பிறகு துணிந்து பிரதி நிதித்துவம் இல்லாமல் வரி கொடுக்க மறுத்து ஆரம்பித்த இந்த கிளர்ச்சி முதலாவது ஸ்வேர்ட் மன்னன் ஜேம்ஸ் காலத்தில் சிக்கல்களின் சிகரத்தை அடைந்தது. மன்னன் மக்களை மாக்களாக கருதினான். அரசன் ஆண்டவனின் பிறப்பு, நீதி அவனது நியதி என்றான். மக்கள் மன்னனும் தங்களில் ஒருவர் தான். அரசன் நலம் அவர்கள் நலத்தில் இருக்கிறது என்றனர். சினமிகுந்து, சீலமிழந்து, சீர் மறந்து ஜேம்ஸ் மக்களின் ஒரே தஞ்சமான பாராளுமன்றத்தை கலைத்து யதேச்சாதிகாரத்தை நிலை நிறுத்த எண்ணினான்.

கூடினர் கூட்டமாக மக்கள் உரிமைக்காக உயிரிழக்கத் துணிந்தோர். காவலன் வருங்கால் காக்கும் கோட்டையாகத் திகழும் பாராளுமன்றத்தை வெடி மருந்தால் சிதைத்து, வேதனையளிக்கும் வேந்தனின் முடிவைக்காண முயன்றனர்.

நவம்பர் நாலாந் தேதி இரவு — சபையிலிருக்கும் தன் நண்பரின் நலம் நாடி ஒருவர் திட்டமிட்டோரில் ஒருவன் மறு நாள் நடக்கப் போகும் நிகழ்ச்சியை எச்சரிக்கையாக வெளியிட செய்தியாக பரவி, மன்னன் காதிற்கு எட்ட வெகுண்டெழுந்த ஜேம்ஸ் அங்கத்தினர் அனைவரையும் சிறை செய்து துன்புறுத்தினான். சிலருக்கு மரண தண்டனை விதித்தான்.

இத்திட்டத்தில் பெரும் பங்கு கொண்டவன் தான் கைபாக்ஸ். அன்றைய தினத்திலிருந்து அவர் மாதிரி கொடும்பாவி கட்டி எரித்துக் கொண்டாடுவது வருடந்தோறும் வழக்கமாகி விட்டது. அதையொட்டி சிறுவர்கள் பாடல்களும் நாட்டுப் பாடல்களும் இயற்றப் பட்டன. வெடிமருந்தில் தோன்றிய வீணனின் நினைவு விளையாட்டுச் சடங்காக சரிக் கட்டப்பட்டது. இன்னும் ஆங்கிலத்தில் கை யிடம் கொடு என்றால் அவமானப்படுத்து என்று பொருள்படுமாம்.

கொடும்பாவிக்கட்டி எரிப்பது பட்டாசு சுடுவது சொக்கப்பானை நகர் நகராக கொளுத்துவது இப்பொழுதும் ஒவ்வொரு வருடமும் நவம்பர் 5-ந் தேதி நடக்கும் சாதாரண நிகழ்ச்சிகளாகும். இந்த தினம் வருவதற்கு ஒரு மாதம் முன்னதாகவே ஏற்பாடுகள் பெருமளவில் நடக்கும். [illegible]வர்கள் பட்டாஸ் கட்டுகளும் மத்தாப்புகளும் ஏராளமாக வாங்குவர். இளைஞர்களும் பெரியோர்களும் இதில் பங்குறுவர். "வா உன் மேல் வாணத்தை கொளுத்திப் போடுகிறேன்" என்று ஒருவரையொருவர் சந்திக்கும் பொழுது சொல்லி பேச்சை துவக்குவது அதாவது இந்த தினத்திற்கு சில நாட்கள் முன்னதிலிருந்து பொதுவாக எல்லா இடத்திலும் கேட்கலாம். இது வானிலையைப்பற்றி சாதாரணமாக ஆரம்பிக்கும் ஆங்கில சம்பாஷணைகளுக்கு பதிலாக சிறிது காலம் திகழும்.

இந்த தினம்நெருங்க நெருங்க நகரசபை அலுவலகர்களும் போலீஸ்காரர்களும் பந்தோபஸ்து முயற்சிகளில் ஈடுபடுவது அதிகமாகும்.

நெருப்பு பிடிப்பதை தடுக்க தண்ணீர் வசதி செய்வதும், குழந்தைகளை விபத்துகளில் இருந்து தவிர்க்க பெற்றோர்களுக்கு டெலிவிஷன் மற்ற விளம்பர யத்தினங்கள் மூலம் எச்சரிக்கைகள் விடுபடுவதைக் காணலாம்.

இதில் பங்கு கொள்ளும் மற்றுமொரு முக்கியமான சில நபர்களைப்பற்றி சொல்லவேண்டும். அது தான் காலிகள் கூட்டம். வருடந்தோறும் பெருகி வரும் தொகையில் உள்ள இவர்கள் அழிப்பவர்களாகவும் நாசகாரர்களாகவும், சிறு வயதிலேயே குற்றப்பட்டியிலில் சேர்ந்தவர்களாகவும் இருக்கிறார்கள். போன வருடம் நெருப்பணைக்க சென்ற அணைக்கும் படையினர்,

[12-ம் பக்கம் பார்க்க]


## ஈரல் குலைநோய் வருவதேன் ?

பெற்றோர், குழந்தைகளிடமுள்ள வாஞ்சையினாலோ, அல்லது மற்றைய காரணங்களினாலோ கண்ட வேளைகளில் விதவிதமான தின்பண்டங்கள் கொடுப்பதினாலும், குழந்தையின் மிகச் சிறு பருவத்திலேயே தாய்ப்பாலை நிறுத்தி மற்றைய ஆகாரங்கள் கொடுப்பதினாலும், குழந்தை தாய்ப்பாலைப் பருகும் பருவத்தில் தாயார் தான் உட்கொள்ளும் ஆகார விஷயங்களில் அஜாக்கிரதையாக இருப்பதினாலும், குழந்தையின் சிறு வயதில் உடல் நிலை மாறுதல் ஏற்படும்பொழுது சரிவர வைத்திய சிகிச்சை செய்யாமல் இருப்பதினாலும், அல்லது இன்னும் பல காரணங்களினாலும் குழந்தைகளுக்கு ஈரல் குலைநோய் வரலாம்.

ஆயுர்வேத வைத்திய பரம்பரையைச் சேர்ந்தவரும், விஜய நகர சமஸ்தான வைத்திய பரம்பரையைச் சேர்ந்தவருமான ஸ்ரீ பிள்ளா நரசிம்ம பாத்ருடு, அனேக ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்த அசல் விஜயநகர மருந்தான பாத்ருடுவின் 'பாலசஞ்சீவினி' (Regd) ஈரல் குலை நோய் ஆரம்ப நிலையில் இருப்பினும், முற்றின நிலையில் இருப்பினும் குணமளிக்கும்.

உங்கள் குழந்தையின் உடல் நிலையில் எந்தவித மாறுதல் இருந்தாலும், குழந்தையின் தற்சமய உடல் நிலையைக்குறித்து 15. ந. பை. ஸ்டாம்புடன் மதராஸ் ஆபீஸுக்கு அனுப்பி சந்தேகங்களை நிவர்த்திசெய்து கொள்க.

**Dr. பிள்ளா பாப்பய்ய பாத்ருடு & பிரதர்**

19, தெற்குமாடவீதி, மைலாப்பூர், சென்னை 4. போன் 71354
பிராஞ்சு: 7, சாரங்கபாணி கோவில் கீழவீதி, கும்பகோணம்.

திருச்சியில் கிடைக்குமிடம்:

1. விநாயகர் மெடிகல் ஹால், பெரிய கடைவீதி.
2. மாருதி மெடிகல் ஸ்டோர்ஸ், தேரடிக்கடைவீதி.

# செய்திக் கோவை

## நடன அரங்கேற்ற விழா

"தேசிய ஒருமைப்பாட்டின் முக்கியத்துவம் குறித்து இப்போது எங்கும் பேசப்பட்டு வருகிறது. நாம் விரும்பும் தேசிய ஐக்கியத்திற்கு மேடைப் பேச்சுக்களைவிடக் கலைத்துறை மூலமே இன்றைய சூழ்நிலைகளில் வழி காண முடியும் என்று புது 'நாட்டிய சுதா' என்ற பரத நாட்டியப் பள்ளி மாணவி குமாரி நீனா குலாட்டியின் நடன அரங்கேற்றத்தின் போது தலைமை வகித்துப் பேசிய மத்திய அமைச்சர் திரு. கோபாலரெட்டி குறிப்பிட்டார். வடநாட்டுப் பெண்களுக்குப் பரத நாட்டியம் கற்றுக்கொடுக்கும் முக்கிய நோக்கத்துடன் இங்கு குருஜி என். வெங்கட்ராமன் அவர்களால் ஆரம்பிக்கப் பெற்ற பள்ளியையும் அதன் சேவையையும் பாராட்டினார்.

பஞ்சாபி பெண்ணான நீனா குலாட்டி தமிழ்ப் பெண்போலத் தமிழ்த் தெலுங்கு கீர்த்தனங்களின் பொருளையும் பரத நாட்டிய வழியையும் உணர்ந்து ராபாவதாளம் தவருமல் இங்கு நாட்டியம் ஆடினுள். நீனா குலாட்டியைப் பாராட்டும் போது வேற்று மொழி பேசும் பெண்ணுக்கு இவ்வளவு அருமையாக நடனம் பயிற்றுவித்த குருஜி வெங்கட்ராமனின் திறமையையும் பாராட்டவேண்டும். இன்று நீனா குலாட்டி நடன அரங்கேற்றத்துடன் அவளது குருவின் திறமையும் அரங்கேற்றி உலகுக்கு வெளிப்படுத்தப்பட்டுவிட்டது என்று சொல்லலாம். தென்னிந்தியர்கள் இந்தி பாட்டு முதலானவற்றைக் கற்று விருப்புடன் பாடுவதை நான் எங்கும் கேட்டிருக்கிறேன். ஆனால் எந்த வட நாட்டினரும் ஆசைக்காவது தியாகராஜ கீர்த்தனத்தையோ அல்லது தமிழிசையையோ பாடி இது வரை நான் கேட்டதில்லை. இப்போதுதான் முதன் முறையாக ஒரு வடநாட்டுப் பெண் தென்னிந்திய கர்னாடக இசைக்கு நடனமே ஆடக் கற்ருள் என்று கண்டு நான் பெருமைப்படுகிறேன். இவ்விதம் ஒரு பெரிய சாதனையைச் செய்து நமது பரத நாட்டியக் கலையை வடஇந்தியப் பெண்களுக்குக் கற்பித்து வரும் இந்த நிறுவனப் மேலும் மேலும் வளர வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். இதுபோன்ற கலைப் பரிமாற்றத்தால் உண்மையில் தேசிய ஐக்கியம் வளரும்."

அடுத்துப் பேசிய பாராளுமன்ற உறுப்பினர் திரு. லங்காசுந்தரம் சங்கீத விற்பன்னர்கள் பரம்பரையில் வந்த திரு. வெங்கட்ராமன் கடந்த பத்து ஆண்டுகளாக டில்லியில் நடனக் கலைக்குச் செய்துவரும் சேவையையும் அவர் பிற மொழியினர் பலரை இத்துறையில் பயிற்றுவித்திருக்கும் திறமையையும் பாராட்டினர்.

அரங்கேற்றம் காணவந்த பெருமக்களை நாட்டிய சுதாத் துணைத்தலைவர் திரு. சங்கரி கணேசன் வரவேற்ருர். அப்போது அவர் கல்லூரியில் விஞ்ஞானப் பட்டப் படிப்புக்குப் பயின்று கொண்டிருக்கும் இந்த மாணவி நாட்டிய சுதா பள்ளிக்கு மிகப் பெரியப் பெருமையைத் தேடித்தரக்கூடிய திறமையைப் பெற்று விட்டாள் என்ருர். திருமதி லலிதா ராமஸ்வாமி, திரு. என். வி. சுப்பிரமணியம், திரு. பி. சீதாராமன், திரு. என். எஸ். நாகராஜன் முதலியோர் நாட்டியத்திற்கு இசைப் பின்னனி வாசித்தனர். நடன அரங்கேற்ற முடிவில் நாட்டிய சுதா பள்ளியின் நிரந்தரத் தலைவர் திரு. விட்டல் ஐயரும் டைரக்டர் திரு. என். வி. வெங்கட்ராமனும் மேடையில் அறிமுகம் படுத்தப் பெற்று கௌரவிக்கப் பெற்ருர்கள்.




அமுத வாக்கு

சாதிக் கொடுமைகள் வேண்டாம் — அன்பு
தன்னில் செழித்திடும் வையம்

அசோகா
பாக்கு







## தில்லித் தமிழ்ச் சங்கம்

புதுடில்லி தமிழ்ச் சங்கத்தின் கட்டிட நிதிக்காக டில்லி மதராசி உயர்நிலை பள்ளிக் கலையரங்கில் சங்கத்தின் சார்பில் 'சேரன் தந்த செல்வம்' என்ற இலக்கிய நாடகம் ஒன்று நடத்தப் பெற்றது. இதில் வழக்கமான நாடகபாணியில் இல்லாமல் காட்சிகள், நடனங்கள், விளக்க உரைகள் முதலியவற்றைச் சங்கிலித் தொடர்போல அமைத்துச் சிலப்பதிக்காரக் கதையை ஒரு புதிய பாணியில் தில்லி மக்களுக்கு அறிமுகப்படுத்த முயன்றது சிறப்பாயிருந்தது. தமிழ் மொழி தெரியாதவர்களும் கண்டு சுவைப்பதற்கு ஏற்ற காட்சி நாடகமாக இதை தில்லித் தமிழ்ச் சங்கத்தினர் அமைக்க முயன்றிருந்தனர். தருமையாதீனகர்த்தா அவர்களின் நல் ஆசியுடன் தொடங்கப் பெற்ற இக் கட்டிட நிதிக்கு ஆதரவு பெருக்க நடத்தப் பட்ட இந்த நாடகத்திற்குத் தமிழ் மக்கள் பெரிய அளவு ஒத்துழைப்பு வழங்கினர். வசூலைப் பொருத்தவரை நாடகம் வெற்றிகரமாக இருந்தது.



# சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 27 | 12—11—1961 | வாரம் 1


## சுதந்திராக் கட்சியின் தேர்தல் அறிக்கை

சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கை வந்திருக்கிறது. ஆளுங் கட்சியின் கொள்கைகளுக்கு முற்றும் புறம்பான திட்டங்களை அது வெளியிட்டிருக்கிறது. இவ்வகையில் தன்னை ஒரு நேர் எதிரிடையான கட்சி என்று கூறிக்கொள்ளும் தகுதியை அது நிரூபித்திருக்கிறது.

உள்நாட்டு வரிக் கொள்கை, தனியார்—பொதுத்துறைத் தொழில் வளர்ச்சி, வெளிநாட்டுக் கொள்கை ஆகிய மூன்று பெரும் அம்சங்களில் முற்றும் மாறுபட்ட கொள்கைகளைப் பிரசாரம் செய்ய சுதந்திரக் கட்சி முன் வந்திருக்கிறது. இந்தத் துறைகளில் சென்ற பதினைந்து ஆண்டுகளாகக் காங்கிரஸ் சாதித்திருக்கு சாதனைகளை மக்கள் நன்கு தெரிந்து கொள்வதற்கு இந்த எதிர்ப்பு ஒரு நல்ல வாய்ப்பை உண்டாக்கித் தரும்.

திட்டக் குழுவை ஒழித்து விடப் போவதாகவும் அது கூறியிருக்கிறது திட்டாங்கள் இரண்டு முடிந்து மூன்ருவது திட்டமும் நடைபெறும் தருணத்தில் இந்தப் பேச்சு எவ்வளவு அபத்தமானது என்பதையும் மக்கள் புரிந்து கொள்ளவும் நல்ல வாய்ப்பு வந்திருக்கிறது.

சுதந்திரக் கட்சியின் எதிர்ப்பினால் மக்கள், தங்கள் வாழ்க்கையில், ஏற்பட்டுள்ள மாறுதல்களையும் காங்கிரஸ் ஆட்சியால் விளைந்துள்ள புரட்சிகரமான நன்மைகளும் நன்கு புரிந்து கொள்வது எளிதாகும். மக்களின் ஆதரவு காங்கிரஸுக்கு மேலும் அதிகமாகும்.

ஜனநாயக வழியில் மக்களுக்குச் சிந்தித்துப் பார்க்கும் சக்தியையும் புதிய ஊக்கத்தையும் கொடுக்கும். சுதந்திரக் கட்சியின் எதிர்ப்பை முழு மனதுடன் காங்கிரஸ் வரவேற்கும். பெரும் வெற்றியும் பெறும்.

★

# கண்ணோட்டம்

—ரா. நா.

★ மனிதாபிமானம் எங்கே?
★ அல்பேனியாவில் காம்ரேடுகள்!
★ நட்சத்திரப் பித்தலாட்டம்!
★ பிரிட்டனுக்குச் செல்ல தடை!
★ பிழை மலிந்த பாட புத்தகங்கள்!

மனிதர்கள் செய்யும் தீமை அவர்கள் மரணத்துடன் மறைந்து விடுகிறது, அவர்கள் புரிந்த நலனே நிலைத்து நிற்கிறது என்று மகாகவி ஷேக்ஸ்பியர் கூறினார். ஆனால் அவருடைய நல்வாக்கைப் பொய்ப்பித்து விட்டார்கள் ரஷ்யர்கள். பல்லாண்டுகள் சர்வாதிகாரம் செலுத்தி ரஷ்யாவை ஆண்டு வந்த ஸ்டாலினின் சடலத்தை மாஸ்கோ காட்சி சாலையிலிருந்து நீக்கி விட்டனர் ரஷ்ய கம்யூனிஸ்டுகள். அவருடைய உடலைக் கொளுத்தி விடப் போவதாகவும் கூறுகின்றனர். தனது ஆதிக்கத்தை வலுப்படுத்துவதற்காக அவருடைய நோக்கத்திற்கு எதிரிடையாக இருந்தவர்களை அவர் ஒழித்துக் கட்டினார் என்று கூறப்படுகிறது. இது உண்மை தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் பல்லாண்டுகள் அவர் புரிந்த கொடுமையை இன்று அவர் மீது குற்றம் சாட்டுபவர்கள் பார்த்துக் கொண்டு தானே இருந்தார்கள். பிறர் வாழ்க்கையில் அக்கறையுள்ளவர்களாக இவர்கள் இருந்திருந்தால் அன்றே இவர்கள் ஸ்டாலினை எதிர்த்திருக்க வேண்டாமா? கம்யூனிஸக் கொள்கையின் சிற்பியாகவும், லெனினின் மதிப்பிற்குரியவராகவும் இருந்த டிராட்ஸ்கியை ஸ்டாலின் நாடு கடத்தி, அவர் தங்கிய நாட்டிலேயே அவரைக் கொலை செய்ய ஏற்பாடு செய்த ஸ்டாலினை அசைக்க இவர்கள் விரலை அசைத்திருப்பார்களா? மனிதாபிமானம் இவர்களுக்கு இருந்திருந்தால் தீமையை முளையிலேயே கிள்ளி எறிந்திருக்க வேண்டாமா?

அது தான் போகட்டும். இன்று ஸ்டாலினைக் குறை கூறுபவர்கள் எப்படி ஆட்சி புரிகிறார்கள்? கட்சியின் விரோதிகள் என்று கூறி பல பிரபலஸ்தர்களைப் பாதாளத்தில் தள்ளி விட்டனர். வராஷு, புல்கானின், மாலெங்கோவ், மாலடோவ் முதலியவர்கள் ரஷ்யாவைக் காட்டிக் கொடுத்து விடவில்லை. கட்சிக்குள்ளே மாறுபட்ட கருத்துள்ளவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் ஸ்டாலினுக்கு உடந்தையாயிருந்தவர்கள் என்று கூறப்படுகிறது, அவ்வாறானால் புல்கானினும், மாலெங்கோவும் எப்படி ரஷ்யப் பிரதமர்களாக நியமிக்கப்பட்டனர். இந்தப்போக்குக்குக் காரணம் வேறொன்றுமில்லை. இவர்களெல்லாம் குருஷேவின் ஆதிக்கத்தை எதிர்ப்பவர்கள். குருஷேவின் தயவிருந்தால் தான் முன்னேறலாம் என நினைப்பவர்கள் அவருக்குத் தாளம் போட்டு தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள். கட்சிக்குள் அபிப்பிராயம் கூறும் உரிமை உண்டு என்று இந்த ஆண்டு கூடிய 22 வது சோவியத் காங்கிரசில் [illegible]பட்டது. எனினும் மாறுபட்ட கருத்துடையவர்கள் மட்டந்தட்டப் படுகின்றனர் என்பது தான் உண்மை.

★

அல்பானியா சோவியத் குடியரசில் ஒரு உறுப்பு நாடு. அந்நாட்டினர் ஆட்சியில் ரஷ்யத்தலைமைப் பீடம் குறுக்கிடுகிறது. அல்பானிய ஆட்சியினர் தங்களுக்கு விரோதிகளை ஒழித்துக்கட்டுகின்றனர் என்று குற்றம் சாட்டப்படுகிறது. ஆனால் ரஷ்யப்பள்ளியில் கற்ற பாடத்தை அவர்கள் கடைப்பிடித்தால் கோபப்படுவானேன், ரஷ்யத் தலைநகரில் ஜனநாயகம் இருந்தாலல்லவா குட்டி நாடுகளில் சுதந்திரம் நிலவும். ஆனால் கம்யூனிஸச் சூழ்நிலையில் ஜனநாயகம் எப்படித் தழைத் தோங்கும். தாஸர்களாயிருக்கும் வரையில் ரஷ்யர்கள் தட்டிக் கொடுப்பார்கள். எதிர்த்து நின்றால் எட்டி உதைப்பார்கள்... இது தான் இன்றைய ரஷ்ய ஆட்சியின் உண்மை நிலை.

★

தனிப்பட்டோர் உரிமைக்காக பாடுபடுவதாகப் பறை சாற்றும் சுதந்திராக்கட்சி அவ்வுரிமையையே பறிப்பதற்குச் சான்று கிடைத்திருக்கிறது. அந்த கட்சியின் வங்காளக் கிளையின் தலைவர் அக்கட்சியின் சார்பாக லோக் சபைத் தேர்தலில் போட்டியிட மறுத்து விட்டார். இதற்கு அவர் கூறும் காரணம் கவனத்திற்குரியது. வங்காளக் கிளையினர் ஒரு முகமாக நிர்ணயித்து அனுப்பிய அபேட்சகர் பட்டியலை அப்படியே நிராகரித்து விட்டு வேற்று அபேட்சகர்களை நியமித்திருக்கிறதாம் அந்தக் கட்சியின் தலைமைப் பீடம். தனிப்பட்டோர் உண்மையை ஆதரிப்பதற்கு தக்கதோர் சான்று இந்த சம்பவம். !

அக்கட்சியின் ஸ்தாபகர் அதிகாரம் செலுத்துவதற்கும் உச்சவரம்பு வகுக்க வேண்டும் என்று கூறுகிறார். அக்கிரமத் தாக்குதலுக்கும் வரம்பு கட்ட வேண்டியது அவசியம் என்றே தோன்றுகிறது.

★

பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் உலகப் புகழ்பெற்ற அரசியல் ஞானி. அணு ஆயுதப்பரீட்சையை நிறுத்த வேண்டும் என்று அவர் கிளர்ச்சி நடத்திவருவது உலகறிந்த விஷயம். அவருக்கு காரியதரிசியாக ஒரு அமெரிக்கர் பணியாற்றி வருகிறார். உடனே பிரிட்டனைவிட்டு வெளியேறுமாறு அவருக்கு பிரிட்டிஷ் ஆட்சியினர் உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர். ரஷ்யா அணுகுண்டு சோதனை செய்வதை வன்மையாகக் கண்டிக்கும் பிரிட்டிஷ் ஆட்சியினர் அணு ஆயுத ஒழிப்பை ஆதரிப்போர்மீது சீறி விழுவானேன் ?

பிரிட்டன் நிறபேதத்தை ஆதரிக்கும் முறையில் நடந்துகொள்கிறது என்று "ஹிந்து" பத்திரிகையின் லண்டன் நிருபர் எழுதினார். இதைக் கண்டித்து லண்டனில் வாழ்ந்த ஒரு இந்தியர் பதில் எழுதினார். ஆனால் தன் கூற்று உண்மை என்று நிருபர் ஊர்ஜிதம் செய்கிறார். காமன்வெல்த் நாடுகளிலிருந்து பிரிட்டனுக்கு வருபவர்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் சட்டம் இயற்றப் போகிறது. இந்த சட்டத்தால் பாதிக்கப்படுபவர்கள் வெள்ளையரல்லாதவர் தான். ஏனெனில் பின் தங்கிய நாடுகளிலிருந்து தான் கல்வி, பயிற்சி வசதி பெற அதிகப் பேர் வெளி நாடுகளுககுச் செல்லுகின்றனர். அவர்கள் வரவுக்கு வரம்பு விதித்தால் அதன் பொருள் என்ன ? கறுப்பு மனிதர்கள் கல்வியறிவு பெற்று முன்னேற்றமடையலாகாது என்பது தான். இந்தியாவிலிருந்து பிரிட்டன் செல்ல விரும்புபவர்களில் தேர்ந்தெடுத்து, கல்வியறிவுள்ளவர்களாகப் பார்த்துத் தான் இந்திய அரசாங்கம் அனுமதிச் சீட்டு வழங்குகிறது. இந்த உண்மையை உணர்ந்து பிரிட்டிஷ் அரசாங்கம் தனது தவறான போக்கைக் கை விடுமா ?

★

துணை வேந்தர்கள் மாநாட்டில் பேசுகையில் பாட புத்தகங்களை அரசாங்கமே வெளியிட வேண்டும் என பிரதமர் நேரு கூறினார். ஆனால் நூல் வெளியீட்டில் அரசாங்கம் தலையிடாதிருப்பதே நல்லது. ஏனெனில் தக்கவர்களைக் கொண்டு வெளியீட்டாளர்கள் புத்தகங்களை எழுதச் செய்வார்கள். இது அரசாங்கத்தின் கைக்கு மாறினால் பாரபட்சம் தலை தூக்க ஆரம்பிக்கும். கல்வி அதிகாரிக்கு வேண்டியவர்கள் ஆதரவு பெறுவார்கள். கல்வி பாழ்பட்டு விடும். மற்ற வர்த்தகத்துறைகளில் வியாபாரத்தை அரசாங்கம் மேற்கொள்வதற்கும், கல்வி நூல்கள் வெளியீட்டை ஏற்பதற்கும் வித்யாசம் உண்டு.

பிறதுறைகளை சர்க்கார் எடுத்துக் கொள்வதினால் பாதிக்கப்படக் கூடியவர்கள் சரக்கு வாங்குபவர்கள். ஆனால் கல்வித்துறையில் ஆட்சியினர் தலையிட்டால் பாழ்படுபவர்கள் நமது எதிர் காலத் தலைவர்கள். சமீபத்தில் நமது ராஜ்யத்தில் அரசாங்க ஆதரவில் வெளியான புத்தகங்களில் பிழைகள் மலிந்திருப்பதாகவும், காலம் தாழ்த்தி வெளிவந்ததால் சில பகுதிகளை நீக்கப்பட வேண்டி வந்ததும் இத்துறையில் சர்க்கார் தலையிடுவது கூடாது என்பதற்கு தக்க அறிகுறிகளாகும்.

★

## காங்கிரஸ் அபேட்சகர் ஜாப்தா

வரும் பொதுத் தேர்தலுக்கு காங்கிரஸ் அபேட்சகர்களைப் பொறுக்கி எடுப்பதற்காக, மத்திய தேர்தல் கமிட்டி நாளை முதல் தொடர்ந்து 19 நாள் கூடும். பல உப கமிட்டிகள் இதுவரை கிடைத்துள்ள அபேட்சகர் ஜாப்தாக்களைப் பரிசீலிக்கும். இவை நவம்பர் 20-க்குள் இவ்வேலையைப் பூர்த்தி செய்யுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

ராஜ்ய பட்டியல்களை ஆராயும் உப கமிட்டிகளுக்கு ஸ்ரீமான்கள் ஸ்வரண்சிங், குல்ஜாரிலால் நந்தா. ஹஜர்னவிஸ், ஹுமாயூன் கபீர், கனுங்கோ. ராஜபகதூர் தலைமை வகிப்பார்கள். இரண்டு அ. இ. கா. க. பார்வையாளர்களும், ராஜ்ய தொடர்பு அதிகாரியும் இவர்களுக்கு உதவியாயிருப்பார்கள்.

சென்னை, ஆந்திரா ஆகிய ராஜ்யங்களின் பட்டியல்களைப் பரிசீலிக்கும் உப கமிட்டியின் தலைவர் திரு. கபீர், திரு. கனுங்கோ மைசூர், கேரள பட்டியல்களின் உப கமிட்டி தலைவர்.

டிசம்பர் 3-ம் தேதி சென்னை ஜாப்தாவைப் பரிசீலித்து முடிவு செய்ய மத்திய தேர்தல் கமிட்டி திட்டமிட்டிருக்கிறது.

சென்னை, மைசூர், உத்தரப் பிரதேசம், பீகார், மத்தியப் பிரதேசம் ஆகிய 5 பிரதேச தேர்தல் கமிட்டிகள் இன்னும் தம் ஜாப்தாக்களை அனுப்பவில்லை. சென்னையைத் தவிர மற்ற பிரதேச கமிட்டிகளில் சிக்கல் இருப்பதாகக் கூறப்படுகிறது.

★

## கூட்டுறவுதின விழா

திருச்சி மாவட்ட கூட்டுறவு, மத்திய பாங்கு கட்டிடத்தில் அகில இந்திய கூட்டுறவு தின விழா தலைவர் எஸ். செங்கமலம் பிள்ளை தலைமையில் நடந்தது. பி. பொன்னம்பல கவுண்டர் கூட்டுறவு கொடியை ஏற்றினார். பாங்கு செயலாளர் ஜி. வரதராஜன் அனைவரையும் வரவேற்றார். விழாவில் டெல்லி மேல் (சட்ட) சபை மெம்பர் தாமஸ் சீனிவாசன், திருச்சி குமரி டுடோரியல் கல்லூரி தலைவர் எம். எஸ். நாடார் ஆகியவர்கள் பேசினார்கள். கூட்டுறவு பற்றி உறுதி மொழியை பாங்கு நிர்வாக அதிகாரி முருகேசன் படித்தார். மற்றொரு நிர்வாக அதிகாரி எஸ். வேலாயுதம் நன்றி நவின்றார்

★





P.A. ராஜசெட்டியார் & பிரதர்
கோயமுத்தூர்.



சிறந்த பெயிண்ட்களுக்கு
ஸ்பார்ட்டன்
இம்பீரியல் டிரேடிங் கார்பரேஷன்,
மேலப்புதூர், திருச்சி-1

இந்தியாவின் சிகரஜோதி
COMPOUNDED ASAFOETIDA
L G
REGD. TRADE MARK
கூட்டுப் பெருங்காயம்
உங்கள் நாவே நற்சான்று
லாலஜீ கோது & கோ - கும்பகோணம்




# லட்சியம்!

ஏற்றத் தாழ்வுகள் இல்லாமல் அனைவரையும் சரிநிகர் சமானமாகச் செய்துவிட வேண்டுமென்ற தூரத்து லட்சியம் ஒன்று யுகாந்தரமாக இருந்து வருகிறது. இந்தக் குறிக்கோளை அடைவதற்காகத் தோன்றிய அரசியல், சமய, சமூகப் பொருளாதாரக் கோட்பாடுகள் ஒவ்வொன்றையும் மறுத்துப் புதுப் புதுக் கொள்கைகளும் சித்தாந்தங்களும் எழுந்து வீழ்ந்து கொண்டே இருக்கின்றன.

இல்லாரும் உடையாரும் இல்லாத கோசலம் கம்பனுடைய கனவுலகை விட்டு மண்ணில் நிலைபெறவேயில்லை. வான்புகழ் படைத்த வள்ளுவப் பெருந்தகையின் சாபம் பலித்து உலகியற்றியான் இன்னமும் பரந்து கெடவில்லை. பாரதியின் சீற்றம் இந்த நிமிஷம் வரை ஜெகத்தினை அழித்துவிடவில்லை. எதற்கும் அசையாமல் ஆடாமல் உலகத்தில் யாவும் பழையபடியே, எல்லையறு பரம் பொருள் முன் இருந்தபடி இருப்பது போல், ஒழுங்காய்ப் போய்க் கொண்டிருக்கின்றன.

★

ஏற்றத்தாழ்வுகள் இல்லாமல் எல்லாம் ஒரே சமதளமாய்ப் போகின்ற நாள் என்றாவது வரக்கூடுமா? ஏது? அப்படி ஆகவேண்டியது அவசியந்தானா என்ற அடிப்படை ஐயப்பாடு கூட ஏற்படுகிறது. எல்லோருக்கும் எல்லாப் பெருஞ் செல்வமும் கிடைத்து விட்டால் பிறகு மனித வாழ்க்கை என்பதற்குத்தான் என்ன பொருள் இருக்கிறது?

அப்படியானால் ஏற்றத் தாழ்வுகள் தான் வாழ்க்கையின் சிறப்பா என்ற கேள்வி பிறக்கிறது. ஆம் என்றும் அது இயல்பு என்றும் சொல்ல வேண்டியிருக்கிறது. சிந்திக்கவேண்டிய விவகாரம்.

★

மனித வாழ்வுக்கு மகத்தான லட்சியம் என்பது ஒன்று உண்டா? இருந்தால் அது என்னவாக இருக்கும்? விடை சொல்லச் சமயங்களும் சாத்திரங்களும் காத்திருக்கின்றன. ஆனால் இவற்றையெல்லாம் ஒரு பிண்டமாக உருட்டித் திரட்டி ''யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்'' என்று சொன்னானே, அவன் தான் உண்மையைக் கூறியிருக்கிறான். அப்படியானால் அவதார புருஷர்களும், ஆசார்யர்களும், புராண இதிகாசங்களும் நான் மறைகளும் நமக்குச் சுட்டிக் காட்டியிருக்கிற ஆத்ம ஞானங்களுக் கெல்லாம் அர்த்தம் கிடையாதா? அருங்கலைகள் எல்லாம் பொருளற்றவையா? கேட்க வேண்டிய கேள்விதான்.

மேலே சொன்னதும், சொல்லப் படாமல் உள்ளதுமான மிக மிக உயர்ந்த மகா ரகஸ்யங்கள், உன்னத லட்சியங்கள், ஆச்சர்யமான கலைகள், அரிய விஞ்ஞானங்கள் எதுவாயினும், இந்த உடல் இயக்கத்தைப் பொருட்படுத்தாமல் தனித்து இயங்கக்கூடிய ஒன்றையேனும் சுட்டிக்காட்டிவிட இயலுமா என்று பாருங்கள். எதுவாயிருந்தாலும் நம்முடைய மனதால் நினைத்து, உள்ளத்தால் உணர்ந்து, ஞானத்தால் தெளிந்து, அனுபவத்தால் அடையவேண்டிய பதங்கள் அல்லது நிலைகள் தானே! அப்படியானால் இவ்வளவுக்கும் ஆதாரமான மனம் என்பது உடலுக்கு சம்பந்தப்படாத தனி வஸ்துவா? உடலுக்குள் நிகழ்கின்ற பௌதீக நெகிழ்ச்சி நிலை ஒன்றுதானே மானத தத்துவம்? உயிர் விளக்கமென்பது உடல் இல்லாமற் காரியப்பட இயலுமா? உடல் என்பது உணவு கொடுக்காமல் நின்று வளர்ந்து உரு மாறித் தோன்றும் தன்மையுடையதா? எனவே எதைச் செய்தாலும் உடலை உணவிட்டு ரட்சிக்கிற அடிப்படைக் காரியம் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்?

★

பார்க்கப் போனால் மனித வாழ்க்கை முழுவதையும் கவர்ந்திருக்கிற ஒரே தத்துவம் இந்தப் பசிதானே! இந்தப் பசி அவ்வப் போது அடங்குவதும் மறுபடியும் சோறு கேட்பதும் என்பது மட்டு மில்லாமல் போய் விட்டால் மனிதனுக்குவேறு வேலை ஏதாவது உண்டா? வேலையென்பது இல்லாவிட்டால் ஒரு கணமாவது உயிர் வாழப் பிடிக்குமா?

★

பசியைப் போக்கும் காரியம் ஒன்றுதான் வாழ்வைக் கவிந்திருக்கும் இயக்கம்.

கவிஞன், ஆத்மஞானி, அரசியல் வாதி, விஞ்ஞானி, கொல்லன், திருடன், சமயப் பிரசாரகன், சமூக சீர்திருத்தவாதி என்றிப்படிப் பலப் பல தோற்றங்களில் மனிதன் இயங்குகிறான். யார் எதைச் செய்தாலும் இதற்கு மேல் பசியைப் போக்குவதற்கான முயற்சியைத் தவிர வேறு என்ன பெரிதாகச் சாதிக்க முடியும் என்று சொல்லுங்களேன்?

பசி வந்திடப் பத்தும் பறந்து போகும் என்பதை யார் இதுவரை மறுத்திருக்கிறார்கள்? இந்தப் பத்துக்குள் அடங்காத மனித விவகாரம் வேறு உண்டா?

முடிவாக. பசியின் விளைவு தான் ஏற்றத் தாழ்வுகள். ஏற்றத் தாழ்வில்லையென்றால் பசியில்லையென்றாகும். பசி போனால் வாழ்க்கை பொருளற்றுப் போகும். அதாவது மனிதராசி இராது.

**கருத்து:** மனித ராசி உள்ளவரை ஏற்றத் தாழ்வும் இருக்கும். அதைப் போக்க வேண்டுமென்ற லட்சியம் தவறில்லை. ஏனெனில் அதை நாடித்தான் வாழ்க்கையே இயங்குகிறது. குழப்பம் தான் மிஞ்சுகிறதோ! மறுபடியும் சிந்தியுங்கள்.

★

# நாட்டு நடப்பு

### அமெரிக்காவில் நேரு
### ஐ. நா-வின் செயலாளர்
### அசோக்மேத்தாவின் திருவாக்கு
### சுதந்திராக் கட்சியின் தேர்தல் அறிக்கை

பிரதமர் நேரு லண்டன் சென்று அங்கு பிரிட்டிஷ் பிரதமருடன் பேசிவிட்டு, தற்சமயம் அமெரிக்காவில் தலைவர் கென்னடியிடம் உலக விஷயங்கள் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார். இவ்விரு நாடுகளின் ஆட்சி அதிபர்கள் நமது பிரதமரை உற்சாகமாக வரவேற்றாலும் அவ்விரு நாடுகளின் பத்திரிகைகள் அவரிடம் ஆத்திரத்தைக் காட்டுவது தெளிவாகத் தெரிகிறது. இந்த சீற்றத்திற்குக் காரணம் என்ன? காங்கோ விஷயத்தில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த ரோடீஷ்யாவின் தலைவர் வெலன்ஸ்கியின் போக்கை நேரு வன்மையாகக் கண்டித்ததனால் பிரிட்டிஷாருக்குக் கோபம். அணு ஆயுத சோதனை விஷயத்தில் அமெரிக்காவைக் கண்டிப்பதுபோல் ரஷ்யாவின் செயலை நமது பாதுகாப்புமந்திரி கிருஷ்ணமேனனும் நேருவும் கண்டிக்கவில்லை என்று அமெரிக்க நிருபர்களுக்கு ஆத்திரம். ஆனால் இந்த மனோபாவத்தைக் கண்டு நேரு கலங்கவில்லை. கலங்குவது அவர் இயல்பு அல்ல. அணு ஆயுத சோதனை தற்காலிகமாக நிறுத்தப்படவேண்டும் என்கிற உடன்பாட்டிற்கு மாறாக ரஷ்யா சோதனை செய்வது தவறுதான் என்று நேரு ஒப்புக்கொண்டார். ரஷ்யா எதற்கும் தயார் என்பதைக் காட்டவே சோதனை செய்கிறது, குருஷேவ் போரை விரும்பவில்லை என்று நேரு பதிலளித்தார்.

ஆனால் குருஷேவின் ஒரு கேள்விக்கு அமெரிக்கர் பதிலளித்தாகவேண்டும். அமெரிக்கா; பிரிட்டன், பிரான்ஸ். மூன்று நாடுகளும் சேர்ந்து நடத்திய சோதனைகளின் எண்ணிக்கைக் குறைவாகவே ரஷ்யா சோதனை செய்திருக்கிறது என்பது குருஷேவின் முதற் குற்றச்சாட்டு. இது உண்மையானால் ரஷ்யாமீது மேலை நாடுகள் சீறிவிழக் காரணம் என்ன? நேருமீது கோபம் கொள்வது எப்படி நியாயம்?

ஹிட்லர் வீழ்ந்த பிறகு, ஜப்பானின் எதிர்ப்பு கலகலத்து வருகையில் ஹிரோஷீமாவில் அணுகுண்டுவீசி, அப்பாவிகளான மக்களை அழிக்க அமெரிக்கா முன் வந்தது ஏன்? என்பது குருஷேவின் இரண்டாவது குற்றச் சாட்டு. ஒருவரையொருவர் சந்தேகக் கண்கொண்டு பார்க்கும் வரை, தத்தம் பலத்தைப் பிரகடனப்படுத்தி எதிரியை எச்சரிக்கை செய்வது இயல்புதானே? இரு சாராரும் சுமுகமாகப்போய், போர் எழ வழியில்லாமல் செய்துவிட வேண்டும் என்று நேரு கூறுவதற்குச் செவிசாய்ப்பதை விட்டு துள்ளிக்குதிப்பானேன்? உலக சமாதானம் நிலை பெற வேண்டும் என்றுதானே ஐ. நா. வில் ஆயுத சோதனை உடனடியாக நிற்க வேண்டும் என்று இந்தியா கொண்டு வந்த தீர்மானம் வெகு வாரியான ஓட்டுகளால் வெற்றி பெற்றது.

★

ஐ. நா. வின் செயலாளராக பர்மிய பிரமுகர் ஊதாண்ட் பொதுச் சபையினரால் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார். அவருடைய இஷ்டப்படி துணைச் செயலாளர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் என்பதை இருதரப்பினரும் ஒப்புக்கொண்டு விட்டனர். ஊதாண்ட் நியமனத்தால் பர்மா மட்டு மல்ல ஆசிய நாடுகளே பெருமையடையலாம். விருப்பு வெறுப்பின்றி தம் கடமையை நிறைவேற்றுவதாக அவர் தமது சங்கற்பத்தை வெளியிட்டுள்ளார். காலஞ்சென்ற ஹாமர் ஷோல்டின் பணியில் இருதரப்பினரும் பூரண ஒத்துழைப்பு அளித்திருந்தால் காங்கோவில் விபரீத நிலை ஏற்பட்டிராது. ஹாமர் ஷோல்டு உயிர் இழக்க நேரிட்டிராது. ஊதாண்டின் பதவிகாலத்திலாவது மேற்கு கிழக்கு வேறுபாடுகளின்றி அவர் பயனுள்ள முறையில் பணிபுரிய எல்லா நாட்டினரும் உதவுவார்கள் என எதிர்பார்க்கலாமா? மத்திய காங்கோ அரசாங்கத்தின் தாக்குதல் பயன்படாமல் கடாங்காவிற்கு வெள்ளைக் கூலிப்படைகள் உதவி புரிகின்றன, அதைத் தடுப்பதற்கு உடனே பாதுகாப்பு கவுன்ஸிலைக் கூட்ட வேண்டும் என ரஷ்யப் பிரதிநிதி ஊதாண்டைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். ஐ. நா. தன் முழு பலத்தையும் பயன் படுத்தி காங்கோவில் உள் நாட்டுச் சண்டை ஓய்வதற்கு வழி செய்ய வேண்டும்.

★

பி. சோ. கட்சித் தலைவர் திரு. அசோக மேத்தா ஒரு நூதன அரசியல் கொள்கையை வெளியிட்டிருக்கிறார். கேரள முதலமைச்சர் திரு. பட்டம் தாணுப்பிள்ளை தன் அதிகாரத்தை யாருடனும் பகிர்ந்துகொள்ள மாட்டார், ஏனெனில் அவரை ஜனங்களே நேரிடையாகத்தேர்ந்தெடுத்திருக்கின்றனர். இது பி. சோ. தலைவர் திருவாக்கு. ஆனால் இது ஜனநாயக நடை முறைக்கும் சிந்தாந்

கியாரண்டியுள்ள கவரிங் நகைகளுக்கு
லெட்சுமி கவரிங் ஜிவல்லரி மார்ட்
24. ஹாபர்ஷா தெரு,
திருச்சி 8.
பவுன் கவரிங் வளையல், 2 வடம், 1 வடம், தாம்புக்கயிறு செயின் கிடைக்கும்.

பஹோலா
வீட்டு ஔஷதங்கள்
அன்றாடம் ஏற்படும் வியாதிகளுக்கு எட்டுவகை நிவாரணிகள் கொண்ட மருந்து செட்
உங்கட்கு உற்றதொரு நண்பன்
பெரிய செட் ரூ. 5-00
சிறிய செட் ரூ. 3-00
இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்
ஹோமியோ ஹவுஸ்
கும்பகோணம்

மோட்டார் பாட்டரிகளுக்கு.
இம்பீரியல் டிரேடர்ஸ்,
போன் :- 406
அம்கோ டீலர்ஸ், திருச்சி-2.

சீலேண்டு பிரைமா கெடியாரம்
உயர்ந்த ரகம் விலை சரசம்
S. கண்ணன் & Co.
திருச்சிராப்பள்ளி.

தத்திற்கும் நேர்மாறானது. ஜனநாயக ஆட்சியின் அடிப்படை மந்திரி சபையின் கூட்டுப் பொறுப்பு. மந்திரி சபை கூடி திட்டம் செய்த முறையில் மந்திரிகள் தத்தம் இலாகாக்களை நிர்வகிக்கவேண்டும். இந்தக் கோட்பாட்டை மீறினால் மந்திரி சபையே பதவியிலிருந்து விலகவேண்டும். இதுதான் ஜனநாயக ஆட்சியின் முக்கிய லட்சணம்.

ஒரு மந்திரி தவறாக நடந்தாலும் அது மந்திரி சபையையே பாதிக்கும். அப்படியிருக்க பட்டம் தாணுப் பிள்ளை தன் அதிகாரத்தைத் தன் இஷ்டப்படி எப்படி நடத்தமுடியும்? பிரதம காரியதரிசி பதவி காலத்தை நிமிஷத்திலும், உயர் நீதிமன்ற நீதிபதி பதவிக்கு தன் இஷ்டப்படி சிபார்சு செய்ததும் தவறு என்பதை திரு. தாணுப் பிள்ளை ஒப்புக்கொண்டு, இனி அவ்வாறு நடைபெறாது என்று வாக்களித்த பிறகு திரு. மேதாவின் கூற்று வியப்பை அளிக்கிறது. மேலும் தாணுப்பிள்ளையின் பி.சோ. கட்சி திருவிதாங்கூர் சட்டசபையில் மிகச் சிறுபான்மையினர். காங்கிரஸ் கட்சி அழைத்ததனால் பி.சோ-க்கள் மந்திரி சபையில் இடம் பெற்றனர். அப்படியிருக்கையில் தாணுபிள்ளை முதலமைச்சராக மக்களால் அனுப்பப்பட்டார் என்று மேத்தா கூறுவது அர்த்தமற்றது. இன்று கூட்டாட்சி வேண்டாம் என்று காங்கிரஸ் கூறிவிட்டால் பட்டம்தாணுப் பிள்ளை அறுபட்ட பட்டம்போல் ஆகிவிடுவார். கேரளத்தின் பிரத்தியேக நிலையில் அங்கு கூட்டாட்சி நீடிப்பதே நல்லது என்று யாவரும் கருதுகையில் அது உடைப்பட்டுப் போகும் முறையில் பொறுப்புணர்ச்சி இருக்கவேண்டிய தலைவர் பேசுவது முறையல்ல.



சுதந்திரா கட்சியின் தேர்தல் அறிக்கை வெளியாகிவிட்டது. காங்கிரஸ் ஆட்சியைக் குறை கூறுவதற்கே அந்த அறிக்கையில் முக்கியத்வம் அளிக்கப்பட்டிருக்கிறது. வரிகளை நிர்த்தாட்சண்யமாகக் குறைக்க முயற்சி செய்யும் என்று அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. வரிகளைக் குறைத்தால் அரசாங்க வருவாய் வெகுவாகக் குறையும். அப்படிக் குறைந்தால் குடியானவர்களுக்கு விதை, உரம், விவசாயசாதனம் முதலியன கொடுப்பதாகக் கூறும் அக் கட்சியினர் தங்கள் நோக்கத்தை எப்படி நிறைவேற்றுவார்கள்? குடியானவனுக்கு நிலவுரிமை யளிப்பதாக கூறுகிறார்களே யாருடைய நிலத்திற்கு அவனை உரிமையாக்குவார்கள்.

மேலும் தொழிலபிவிருத்திக்கு வழி செய்வது பற்றிக் குறிப்பிடுகையில் உற்பத்தியாளர், பண முதலிடு செய்பவர், தொழிலாளி, சாமான் வாங்குபவர்கள் யாவரின் போக்குக்கும் சம சந்தர்ப்பம் கொடுத்து உற்பத்தி செய்ய வேண்டும் என்று கூறியுள்ளனர். உற்பத்தியாளன் தனக்கு மிகுதியான லாபம் கிடைக்க வேண்டும் என்பான்; பணம் போட்டவன் அதற்கேற்ற வட்டி கிடைக்க வேண்டும் என்பான்; தொழிலாளி கால நிலைக் கேற்ப சுகமாகக் காலட்சேபம் நடத்து வதற்கான ஊதியம் வேண்டும் என்பான். சாமான் வாங்குபவன் நல்லசரக்குமலிவாகக் கிடைக்க வேண்டும் என்பான். இந் நால்வகையினரின் நியாயமான நலன் எது என்று யார் நிர்ணயிப்பது?

ஆனால் சுதந்திராக் கட்சியினரும் மக்களும் ஒரு விஷயத்தை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். வரி விதிப்பின் நூதன முறைகளைக் கண்டு பிடித்தவர் சுதந்திரா கட்சிஸ்தாபகர். தனியார் உரிமையில் கடன்களுக் குறைப்பு சட்டம்,பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் முதலியன மூலம் முதன் முதலில் கைவைத்ததுசுதந்திரா கட்சிஸ்தாபகர். அவர் காட்டிய வழியைத் தான் இன்று காங்கிரஸ் பின்பற்றுகிறது. படகோட்டி படகை நட்டாற்றில் விட்டு விட்டுப் போனால் படகிலிருப்பவர்கள் எப்படியாவது கரை சேரும் வழியைக்கண்டு பிடித்தால் அதுதவறா?

- ரா. நா.

கைத்தறி மில் ஜவுளிகள் B & C பேன்ஸி ஸில்க்குகளுக்கு
ஸ்ரீ கணேசன் ஸ்டோர்ஸ்
நேதாஜி ரோடு. சைனாபஜார், திருச்சி-2

தமிழ், ஆங்கில
காந்தீய-சர்வோதய
பூமிதான-கிராமதான
இலக்கியத்திற்கும், பத்திரிகைக்கும்
சர்வோதய பிரசுராலயம்,
தஞ்சாவூர்

## புதிய மருந்து

கிரிஸோவின் என்றதோர் பூஞ்சணப்பகை மருந்தை பிரிட்டிஷ் நிறுவனம் ஒன்று விற்பனைக்குக் கொண்டு வந்திருக்கிறது. படர் தாமரை, வண்ணான் பற்று, எச்சில் தழும்பு முதலியவற்றை குணபடுத்தும் ஆற்றலுள்ள இம் மருந்தைக் கண்டு பிடித்த பெருமை கிளாக்ஸோ லாபரடரீஸ்-இம்பீரியல் கெமிகல் இன்டஸ்ட்ரீஸ் ஆகிய இரு நிறுவனங்களைச் சேரும். அழுகும் ஆரஞ்சுப் பழத்தோலில் படியும் பூஞ்சணத்தில் இருந்து 'கிரிஸோஃபல்வின்' என்ற பொருளைப் பிரித்தெடுக்கிறார்கள். இதை பக்குவப் படுத்தி 'கிரிஸோவின்' என்ற பெயரில் விற்பனை செய்யப்படுகிறது.

சொறி நோய்களுக்கு பூச்சு மருந்துகளை உபயோகிப்பது வழக்கம். ஆனால் கிரிஸோவின் உட்கொள்ளும் மருந்து, இது இரத்தத்தில் கலந்து சருமத்தில் உள்ள நோயைத்தாக்குகிறது. பற்று அல்லது படர் தாமரைக்குக் காரணமான பூஞ்சணம் அழிந்த பிறகு, தோல் உரிந்து புதுத்தோல் வளருகிறது. இந்த மருந்து உடலில் ஊறிய பிறகுதான் குணம் தெரியும். ஆகையால் ஒரு சில வாரங்களுக்கு உட்கொள்ள வேண்டும்.

## கணக்காயர் நாய்

கோல்செஸ்டர் (எஸ்ஸக்ஸ்) பள்ளியொன்றில் பிங்கோ (வயது 18 மாதம்) என்ற நாய் கூட்டல், கழித்தல், பெருக்கல் கணக்குகள் செய்கிறதோடு 50 வரை எண்ணவும் செய்கிறதினால் ஒரு கணக்கு வாத்தியாராக ஆகிவிட்டது.

தன்னிடம் கேட்கப்படும் கேள்விகளுக்கு தனது வாயால் 'ளொள்' 'ளொள்' என்று குறைத்து பதில் சொல்கிறது.

★

( 2-ம் பக்கத் தொடர்ச்சி )

அவன் வீட்டில் இரண்டு கோழிகள் இருந்தால் தினமும் அவைகள் அந்தக் குப்பையைக் காலால் கிளறி விவசாயிக்குச் சிரமம் கொடுத்துக் கொண்டேயிருக்கும், ஒவ்வொரு நாளும் கிளறி விடப்பட்ட குப்பையை விவசாயி மீண்டும் குவிக்க வேண்டி வரும். இது மறைமுகமாக ஒரு நன்மையாக முடிகிறது. குப்பை நன்றாக மேலும்கீழும் புரட்டப்பட்டு ஒரே மாதிரி உலர்கிறது. இதை விட அந்தக் குப்பையில் தோன்றுகின்ற புழுக்களையெல்லாம் கோழி அவ்வப்போது தின்று விடுவதால் வயலில் குப்பையைக் கொட்டும்போது பூச்சி புழு இல்லாமல் சுத்தமாக இருக்கும். பயிரில் பூச்சிகளின் தாக்குதல்களோ, நோயோ இக்குப்பைப் புழுக்களால் ஏற்பட இடமிராது. இது ஒரு பெரிய உதவியாகும். விவசாயியினுடைய வீட்டிலும் அரணை, பூரான், தேள் முதலான விஷப்பூச்சிகளை கோழி கொத்தித் தின்று விடுகிறது. குடியானவர்கள் கோழி, சேவல்களை வளர்த்துச் சண்டை செய்யப் பழக்கிக் கேளிக்கைப் பொழுது போக்குக்கும் பயன் படுத்துகிறார்கள். துணைத்தொழிலாகக் கோழி வளர்ப்பதன் மூலம் விவசாயி தன் குடும்ப வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளலாம். இப்படிக் கோழி வளர்ப்பின் நன்மைகளையறிந்தே கிறிஸ்து பிறப்பதற்கு 3000ஆண்டுகளுக்கு முன்பு சீன தேசத்தையாண்ட ப்யூசி என்ற சக்ரவர்த்தி தன்னுடைய விவசாயக் குடிமக்கள் கோழி வளர்க்க வேண்டுமென்று ஆணையிட்டதாக வரலாறு கூறுகிறது. இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களிலும் ( சமூக வளர்ச்சித் திட்டத்தின் கீழ் ) கோழிப்பண்ணைக்கு முக்கியத்துவம் வழங்கப் பட்டு வருகிறது. அமெரிக்க தொழில் நுணுக்க ஒத்துழைப்பு மிஷன் இதற்குப் பல உதவிகளையும் செய்து வருகிறது. கோழிகளைத் தெரிந்தெடுத்தல், உணவு கொடுத்தல், இனப்பெருக்கம் செய்வித்தல், நோய் வராமல் காத்தல் முதலியவற்றில் நவீன முறைகளையும் அறிவையும் பெற்று விவசாயிகள் கோழி வளர்க்கும் தொழிலில் ஈடுபடுவார்களானால் தங்கள் விவசாயத் தொழிலுக்கு ஏற்ற இது போன்ற வேறு துணைத் தொழில் இல்லையென்றே உணர்வார்கள்.

விவசாயிக்குத் தச்சர், கொல்லர் லேவாதேவித் தொழிலாளி, வியாபாரி இப்படி எத்தனையோ பேர் ஒவ்வொரு வகையில் தொடர்பும் துணையும் செய்பவர்களாய் இருந்தாலும்—, அவர்கள் செய்யும் உதவிஅனைத்தும் பிரதிபயன் கருதியதாகும். பயன் கருதாது வாழ்ந்து ஊட்டும் அளவுக்கு மேல் உதவும் இந்த ஆடுமாடு முதலான வீட்டு மிருகங்களையும் கோழி, சேவல் போன்ற வீட்டுப் பறவைகளையும் விவசாயி அன்புடன் காப்பது தனக்குத் தானே பெருநன்மை செய்து கொள்வதாகும்.



## அரியலூர் டி. மு. கோ.
O. S. 518/61

உ. தா. பொய்யாத நல்லூர் அழகப்புடையார் மகன் வீரப்புடையார் —வாதி

ஷி யூர் P. செல்லமுத்துடையார் மகன் செல்லமுத்துடையார் —பிரதிவாதி

வாதி ஒப்பந்தப்படி தாவர நிலம் மறு கிரயம் செய்து கொடுக்க பிரதிவாதி பேரில் தாவா போட்டு 18—11—61ல் ஈரங்கி. அன்று உமது சாட்சியை தெரிவிக்காவிடில் Exparte ஆக முடிவு செய்யப்படும்.

என். அப்பாத்துரை
வக்கீல்

3 | 4614 | 149

## அரியலூர் டி. மு. கோ.
O. S. 564/61

கிருஷ்ண படையாச்சி —வாதி

வைத்திலிங்க படையாச்சி —பிரதிவாதி

11-5-56ல் ஏற்பட்ட பிருமிசரி நோட்டின் கீழ் ரூ. 636—25 கிடைக்க பிரதிவாதிபேரில் வாதி தாவா செய்து பிரதிவாதியின் சம்மனை பப்ளிகேஷனுக்கும் பிரசுரம் செய்யவும் ஒட்டி சார்வு செய்யவும் உத்திரவாகி 21-11-61ல் வாய்தா. அன்று ஷி கோர்ட்டில் ஆஜராகாவிடில் எக்ஸ்பார்ட்டி செய்யப்படும்.

N. V. கிருஷ்ணசாமி அய்யங்கார்
4 | 4615 | 150 அட்வகேட்

## அரியலூர் டி. மு. கோ.
O. P. 102/61

தியாகராசன் வகையரு — மனுதாரர்கள்

இல்லை — எதிர் மனுதார்

இறந்த சுந்தர மூப்பனருக்கு வரவேண்டிய லேவாதேவி தொகைகளை வசூலித்து அடையும் பொருட்டு, தங்களுக்கு வாரீசு சர்டிபிகேட்டு வழங்க வேண்டி மனுதாரர்கள் மனுக் கொடுத்து அதன் ஈரங்கி 27—11—61க் தேதி வைக்கப்பட்டிருக்கிறது. ஆட்சேபனையுள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ளலாம்.

S. P. முத்துகுமாரசாமி
அட்வகேட்

6 | 4617 | 152

## சீர்காழி டி. மு. கோர்ட்
O. S. 173/60

பிச்சுமணிய்யர் —வாதி

ராஜாமணிய்யர் வகையரு —பிரதிவாதிகள்

பஞ்சரத்தினம் —6ம் பிரதிவாதி

ஷி நம்பரில், பெந்தக சொத்துக்களை ஏலத்திற்கு கொண்டுவர மனுக் கொடுத்து, இஸ்தியார் நிஷ்கரிஷை செய்யவும்; வாதி ஏலம் கேட்டு டிக்ரித் தொகையில் உளவடைத்துக் கொள்ளவும், மனுக் கொடுத்து நோட்டீஸுக்கு ஆர்டராகி, 6ம் பிரதிவாதிக்கு நோட்டீஸ் சர்வாகாததினால்;ஒட்டி சர்வ் செய்யவும் பேப்பரில் பப்ளிஷ் செய்யவும் ஆர்டராகி, 24—11—61ல் ஹியரிங். 6ம் பிரதிவாதிக்கு ஆக்ஷேபனை இருந்தால், தெரிவிக்கலாம்.

வி. சுவேதாரண்யம் அய்யர்
5 | 4616 | 151 அட்வகேட்

## சிதம்பரம் டி. மு. கோ
S. C. 554/61

கோவிந்தசாமி கவுண்டர் —வாதி

முகம்மது நகுதா மறைக்காயர் —பிரதிவாதி

ஷி நெம்பரில் வாதி பிரதிவாதி பேரில் நோட்டுப் படிக்கு ரூ. 350 கிடைக்க தாவா செய்து 20—11—61ல் ஈரங்கி. அன்று ஆக்ஷேபனையை தெரிவிக்கலாம்.

C. S. தாத்தாச்சாரியார்
அட்வகேட்

8 | 4619 | 154

## துறையூர் டி. மு. கோ
O. S. 60/61

தனலட்சுமி அம்மாள் வகையரு —வாதிகள்

P. சப்பாணி —4ம் பிரதிவாதி

வாதிகள் பிரதிவாதிகள் பேரில் பிராமிசரி நோட்டுப்படி ரூ. 4284-46க்கு தாவா செய்து 16—11—61ல் வாய்தா. ஆக்ஷேபனையை தெரிவிக்காவிடில் எக்ஸ் பார்டியாக தீர்ப்பு செய்யப்படும்.

T. M. சோமசுந்தரம்
அட்வகேட்

7 | 4618 | 153

## பட்டுக்கோட்டை டி. மு. கோ.
SC 128/1955

சுப்பன் குடும்பன் —வாதி

பட்டுக்கோட்டை டி. மு. லாக்கா அத்தாணியிலுள்ள அய்யாசாமியய்யர் மகன் வெங்கிடேசய்யர் —பிரதிவாதி

ஷி நெம்பர் டிகிரியை நிறைவேற்ற வேணுமாய் வாதி மனுக் கொடுத்து நோட்டீசு சர்வாகாததால் ஒட்டி சர்வு செய்யவும், பப்ளிகேஷனுக்கும் உத்திரவாகி 13-11-61 ல் ஈரங்கி ஆக்ஷேபனையை அன்று தெரிவிக்கலாம்.

T. சடகோபன்
1 | 4561 | 147 அட்வகேட்

## Notice by the petitioner

In O. P. Nos. 65 and 66 of filed by the petitioner Yogi Swami Raman at Trichinopoly before the Estate Abelition Tribunal, Trichinopoly the petitioner claims a sum of Rs. 420-30 nP. from Interim and Rs. 420-30 nP. from the final compensation amount in deposit with the Tribunal as compensation due from Government for taking away his Melwaram rights of his Manipam lands in Adichanur, Udiarpaliam Taluk. The petitions are posted to hoaring on 27—11—61. Any body wishing to say anything on the matter may do so before the tribunal on that date.

Sd. Yogi Swami Raman
Petitioner.

2 | 4613 | 148

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

## ஆங்கில தீபாவளி........

மீது காலிகள் லண்டனில் கல், மட்டை முதலியவை வீசி எறிந்து எதிர்த்தது பல செய்தித்தாள்களில் தலையங்கமாக வந்தது.

நவம்பர் 5-ந் தேதி இரவு தேசமெங்கும் பெரிய தீ வளர்த்து அதில் எல்லாவித பொருள்களையும் எறிந்து, ஆண், பெண், பெரியோர் சிறியோரென வித்தியாசமில்லாமல் கலந்து கொள்வர். இதில் வீடுகளிலிருந்து பழைய ஜன்னல்கள், கதவுகள், நாற்காலிகள், மேசைகள் எல்லாம் எப்படுறியம் அதற்காக தத்தம்வீடுகளின் கதவுகளை காலிகளிடமிருந்து பாதுகாக்க சிலசமயம் வீடுகளிலிருந்தே சிலர் வெளியேற மாட்டார்கள்.

ஒரு புறம் தீ ஜ்வாலை விட்டதாக எறிய மற்றொரு புறம் வாணவேடிக்கைகள் நடைபெறும். விதவித வர்ணங்களில் வாண இந்த வாணங்கள் நிரப்ப அழகான ஆடைகளணிந்து பாலர்கள் கூச்சலும் கூத்துடனும் இந்த நிரலில் பங்கு கொள்ள பனிகாலகுளிரை இந்த பெருந் தீயின் வெப்பம் குறைக்க 1 மணி நேரம் கேளிக்கைகள் நடக்கும்.

நேரத்தில் கருத்துள்ள ஆங்கிலேயர்கள் நாள் பூராவும் வீணுக்காமல் இந்த பெரும் பொழுது போக்கை கச்சிதமாக சிறிது நேரத்தில் முடிப்பது பாராட்ட தக்கது. அதுவும் இந்த வருடம் நம் தீபாவளிக்கு 2 நாள் வித்தியாசத்தில் வரும் இத்தினம் எப்படிவெடி விபத்து ஆரம்பித்து வெடி கேளிக்கையாக வருடந்தோறும் வருகிறது என்பது விந்தையாக இருக்கிறது.



## தமிழ்நாடு கிராமதான மாநாடு

வத்தலக்குண்டு; 6-நவம்; மதுரையில் டிசம்பர் 2, 3வகளில் (சனி, ஞாயிறு) தமிழ்நாடு கிராமதான மகாநாடு நடைபெறவிருக்கிறது. மகாநாட்டில் தேசீய திட்டக் குழு உறுப்பினர் திரு ஸ்ரீமன் நாராயண் அகர்வால் அவர்களும் அகில இந்திய சர்வ சேவா சங்கத் தலைவரும், முன்னாள் ஒரிஸா மாநில முதலமைச்சருமாகிய திரு. நவகிருஷ்ண சௌத்ரி அவர்களும் மற்றும் பல தலைவர்களும் கலந்து கொள்ள இசைந்துள்ளார்கள்.

கிராமதான கிராமங்களில் அபிவிருத்திக்குத் தடையாக உள்ள நிலப்பிரச்னை சம்மந்தமாகவும் உணவு, உடை, முதலிய அடிப்படைத் தேவைகளில் தன்னிறைவு பெற இக் கிராமங்களில் வழி வகை செய்வது பற்றியும், கதர் மற்றும் கிராமக் கைத்தொழில்கள் மூலம் இக்கிராமங்களில் அனைவருக்கும் வேலை வாய்ப்பு செய்து கொடுப்பது பற்றியும் இம் மகாநாட்டில் கலந்து கொள்ளும் பிரதிநிதிகள் ஆலோசித்து முடிவு செய்வார்கள். தமிழ் நாட்டில் உள்ள 253 கிராமதான கிராமங்களிலிருந்தும் விவசாயிகளின் பிரதிநிதிகளும் இக்கிராமங்களில் பணியாற்றும் பல்வேறு ஸ்தாபனங்களைச் சேர்ந்த ஊழியர்களும் மகாநாட்டின் பிரதிநிதிகளாக அழைக்கப்படுவர்.

## திறப்பு விழா

திருச்சி சிந்தாமணி பஸ் நிலையம் அருகே "இம்பீரியல் ஆட்டோமொபைல்ஸ்" என்ற பெயரில் மோட்டார் சம்பந்தப்பட்ட சாமான்கள் விற்பனை நிலைய திறப்புவிழா 5-11-61 அன்று காலை 4 மணியளவில் நடந்தது.


சூட்டிங், ஷர்ட்டிங் ரகங்களும் எங்களிடம் பார்க்கத் தகுந்தவை.
எல்லாவிதமான ஜவுளி தினுசுகளும் கிடைக்கும் ஒரே இடம்!

பி.ரா. நாராயணசாமி அய்யர்
ஜவுளி வியாபாரம்
பெரியகடை வீதி — திருச்சிராப்பள்ளி

பிராஞ்சு:- 'பான்ஸி ஹால்' சைனபஜார், திருச்சி
மில் ஜவுளிகள் எங்களிடம் சில்லரை வியாபாரிகளுக்கு
மொத்தமாகக் கிடைக்கும்.

அமிர்தாஞ்சனம்




சகல வலி நோவுகளுக்கும்
கைகண்ட மருந்து
எங்கும் கிடைக்கும்.

அமிர்தாஞ்சனம்
லிமிடெட்
சென்னை, பம்பாய்.

M/s. G. RADHAKRISHNA CHETTIAR SONS,
JEWELLERS, TIRUCHY-8.




பவுன் நகைகள் & வெள்ளிப்பாத்திரங்களுக்கு
M/s. G. ராதாகிருஷ்ண செட்டியார் சன்ஸ்
ஜீவல்லர்ஸ், பெரியகடை வீதி, திருச்சி-8.
மானேஜிங் பார்ட்னர்: R. ஜெயதேவன்.



on all Thirsty occasions
VINCENTS


Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji News printers, 24, A-Theradi Bazaar, Tiruchy-2